# சீசர் சாவெஸ்

ஆங்கிலத்தில்: ரூத் பிரான்சேரே

படம்: ஏர்ல்

தமிழில்: குமரேசன் முருகானந்தம்



*சீசர் சாவெஸ்*, அவர் எட்டாவது வகுப்பு முடிக்கும் முன்னர், கலிபோர்னியாவில் 36 பள்ளிகளில் பயின்றார். அவரது பெற்றோர் புலம் பெயர்ந்த மெக்சிகன்-அமெரிக்க தொழிலாளர்கள். அவர்கள், விளைச்சலுக்கு ஏற்றபடி கலிஃபோர்னியாவின் பல்வேறு இடங்களுக்கு வேலைக்காகக் குடிபெயர்ந்தார்கள். இடுப்பொடிய கடினமாக உழைத்த போதிலும், அவர்களுக்கு மிகக்குறைந்த சம்பளமே கொடுக்கப்பட்டது. அதைக்கொண்டு, அவர்களது குடும்பத்திற்குத் தேவையான உணவு மற்றும் உடைகளைக் கூட வாங்க முடியவில்லை.

தனது சக ஊழியர்களின் நிலைமைகளை மேம்படுத்த இளம் *சாவெஸ்* விரும்பியது ஆச்சரியமல்ல. அவர் அவர்களுக்கு ஆங்கிலம் கற்றுக்கொடுத்தார். தங்களது துயரம் தோய்ந்த வாழ்க்கை முறையை மேம்படுத்த வேண்டிய தேவையிருப்பதை அறிவுறுத்தினார். கடைசியாக, திராட்சைப் பறிக்கும் தொழிலாளர்கள் லாரி ஓட்டுனர்கள், கரையோரம் வசிக்கும் மக்கள் மற்றும் கடைக்காரர்கள் அனைவரும் ஒன்றுகூடி நியாயமான ஊதியத்திற்காக வேலைநிறுத்தம் மேற்கொண்டபோது *சீசர் சாவெஸ்* அவர்களை வழிநடத்தினார். அதனால், *சீசர் சாவெஸி*ன் பெயரும் பணியும் அமெரிக்கா முழுவதும் நன்கு அறியப்பட்டிருக்கிறது.

*ரூத் பிரான்சேரே* சமூக பிரச்சினைகளில் மிகவும் ஆழமான புரிதலும், புலம் பெயர்ந்த தொழிலாளர்களின் மீது உண்மையான இரக்கமும் உடையவர். எழுச்சியூட்டும் அவர்களின் தலைவரைப் பற்றிய அவருடைய கதை நமது வளமான நாட்டில், இன்னமும் பல பகுதிகளில் மிகவும் மோசமான ஏழ்மை உள்ளது என்ற நமது புரிதலை வளர்கிறது .



*அரிசோனா*வின் *யுமா* அருகிலுள்ள உலர்ந்த பாலைவனத்தை சூரியன் சுட்டெரித்துக் கொண்டிருந்தது. அங்கு *ஜோஷுவா* மரங்கள் எனும் முட்கள் நிறைந்த உயரமான கள்ளிச்செடிகள் அமைதியான தோற்றமுடைய மக்களைப் போன்று மணல் நிலத்தில் நிற்கின்றன.



ஒரு காலத்தில், ***சீசர் சாவெஸ்***, அவரது பெற்றோர் மற்றும் ஐந்து சகோதர சகோதரிகளுடன் இந்த சிறிய பண்ணையில் வாழ்ந்து வந்தார்.

அவருக்கு பத்து வயது ஆகும்வரை, அவர் வெறும் கால்களினால் சூடான நிலத்தை தனது பாதங்களால் உணர்ந்திருந்தார். தனது பழுப்புநிறத் தோலில் ஊசி போன்று தைக்கும் சூடான தூசியையும் அறிந்திருந்தார்.



சீசரின் தாத்தா *மெக்சிகோ*விலிருந்து *அமெரிக்கா*விற்கு வந்தார். *மெக்சிகோ*விலிருந்து புலம்பெயர்ந்த மற்ற தொழிலாளர்களுடன் சேர்ந்து, *அரிசோனா*வின் புறம்போக்கு நிலத்தில் குடியேறினார்கள்.

தாத்தா, தனது சிறிய பண்ணையின் கள்ளிச் செடிகளையும் மரங்களையும் வெட்டி, மணல் நிலத்தை உழுது நீர்பாய்ச்சினார். அங்கு அவர் முலாம்பழம், மக்காச்சோளம் மற்றும் பீன்ஸ் ஆகியவற்றை நடவு செய்தார். அவர் மிகவும் கடினமாக உழைத்தார்.



பின்னர், ***சீசரின்*** பெற்றோர் அதே பண்ணையில் அதிகாலையிலிருந்து இருட்டும் வரையிலும் உழைத்தனர். மூத்த குழந்தைகளும் அவர்களுக்கு வேலையில் ஒத்தாசையாக இருந்தனர். ஆரம்பத்தில், சீசரும் சிறு குழந்தைகளும் வீட்டிலேயே தங்கினர். ஆனால் போதிய வயதை எட்டியதும், அவரும் ஒத்தாசையாக இருந்தார். அவர் களையெடுக்கவும், தண்ணீர் கொண்டுவரவும் செய்தார்.

சீசரின் குடும்பம் தங்கள் உணவுக்கான பயிர்களை வளர்த்தனர். கூடுதலாகக் காய்கறிகள் இருந்தால் அவற்றை அவர்கள் ***யுமா*** சந்தைக்கு எடுத்துச்சென்று விற்றனர். கிடைத்த அந்த பணத்தைக்கொண்டு  சில ஆடைகளை அவர்கள் வாங்கினார்கள். ஆனால் சில குழந்தைகள் குளிர்காலத்திலும் வெறுங்கால்களுடன் நடக்க வேண்டியிருந்தது. ஞாயிற்றுக்கிழமைகளில் தேவாலயத்திற்கு செல்லும்போதும் அணிந்துகொள்ள யாருக்கும் நல்ல ஆடைகள் இருந்ததில்லை.

சீசரின் குடும்பத்தில், எல்லோருடைய தோலும் தலைமுடியும்  கறுப்பாக இருந்தது. ***ஸ்பானிஷ்*** மட்டுமே அவர்கள் பேசினார்கள். அவர் அமெரிக்காவில் பிறந்திருந்தாலும், அவர்கள் ***மெக்சிகன்-அமெரிக்கன்*** என்று அழைக்கப்பட்டனர்.

***சீசர்*** சிறியவராக இருந்தபோது, ***அமெரிக்கா*** தனது மிகுந்த சிரமமான காலகட்டத்தில் இருப்பதாக தனது பெற்றோர்கள் அடிக்கடிப் பேசிக்கொள்வதை கேட்டார். ***யுமா***வில் சிலர் காய்கறி வாங்கக்கூட வசதியற்று இருந்தார்கள்.

1937 ல், ***சீசர்*** பத்து வயதாக இருந்தபோது, அவரின் பெற்றோர், அந்தப் பண்ணையில் இனி இருக்க முடியாது என்றார்கள். ஒவ்வொரு விவசாயியும் வரி எனும் பெயரில் அரிசோனா அரசுக்கு பணம் செலுத்த வேண்டும் என்று அவர் விளக்கினார்கள். அங்கணம் வரி செலுத்த முடியாவிட்டால், அவர்கள் தங்களது பண்ணையை மாநில அரசாங்கத்திற்கு திரும்ப ஒப்படைக்க வேண்டும்.

***சாவெஸ்*** குடும்பம் அந்த வருடம் வரி செலுத்துமளவுக்கு போதுமான பணம் சம்பாதிக்கவில்லை. அவர்களுடைய அண்டை வீட்டார்களும் இதே நிலையில் தான் இருந்தார்கள். பின்னர் அவர்கள் ஆலோசனை கேட்கும் விதமாக **கத்தோலிக்க** ஆயரிடம் சென்றனர். இவர்களுக்கு ஆங்கிலம் பேசத் தெரியாது, மேலும், அவர் ஆங்கிலம் பேசத்தெரிந்தவர் என்பதால், இவர்களுக்கு உதவ முடியும் என்று அவர்கள் நினைத்தார்கள்.

**ஆயர்** அவர்களுக்கு உதவிடவே நினைத்தார்.





ஆனால், வருந்தத்தக்க வகையில், அவர்கள் வரிகளை செலுத்தியே ஆக வேண்டும், இல்லையெனில் அவர்கள் வெளியேற வேண்டும், என்பதையே அவர் திரும்பவும் கூறினார். அவர்களுக்குக் கொடுக்குமளவிற்கு அவரிடத்தில் பணம் இல்லையென்றும் வருத்தம் தெரிவித்தார்.



சில காலம் மக்கள் மிகவும் வருத்தமுற்றும் பயந்தும் இருந்தனர். அவர்களுக்கு என்ன செய்யவேண்டும் என்று தெரியவில்லை.

பின்னர் தொழிலாளர் ஒப்பந்ததாரர் என்றழைக்கப்படுவோர் ***யுமா***விற்கு வந்தனர். அவர்கள் ***கலிபோர்னியா***வின் பெரிய பண்ணைகளுக்குத் தேவையான தொழிலாளர்களைத் தேடி வந்தனர். ஒரு பண்ணையிலிருந்து மற்றொன்றிற்கு சென்று பருத்தி, காய்கறிகள் மற்றும் பழங்களை பறித்துக்கொடுப்பதன் மூலம் பெருமளவு பணமீட்ட முடியும் என்று ஏழை விவசாயிகளிடத்தில் கூறினர்.

சீசரின் பெற்றோர், தாங்கள் கேள்விப்பட்டதைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். ***யுமா***வில் அவர்களுக்கு எந்த வேலையும் இல்லை என்று அவர்களுக்குத் தெரியும். அதனால் அவர்கள் ***கலிஃபோர்னியா***விற்கு செல்ல முடிவு செய்தனர்.



பின்னர் கோடையில், ஒரு நாள் அவர்கள் தங்கள் பழைய படுக்கைகளைச் சுருட்டி, பாத்திரங்கள் மற்றும் வாளிகளைக் கட்டி எடுத்துக்கொண்டனர். மற்றும் தேவையான மற்றவற்றை ஒன்றாக எடுத்துக்கொண்டனர். மேலும், திருமதி ***சாவெஸ்***, அவரது கைகளால் பின்னிய அழகிய பின்னலாடைகளையும் பத்திரமாக எடுத்து வைத்துக்கொண்டார். பின்னர், இவை அனைத்தையும் தங்களுடைய பழைய ***ஸ்டுடிபேக்கர்*** வாகனத்தின் மேல் கட்டினர்.



அந்த பெற்றோரும் ஆறு குழந்தைகளும் மேற்குத் திசையில், சில மைல் தொலைவிலிருக்கும் கொலராடோ ஆற்று பாலத்தை நோக்கி காரில் பயணித்தனர்.

ஆற்றைக் கடந்ததும் ***கலிபோர்னியா இம்பீரியல்*** பள்ளத்தாக்கில் இருப்போம் என்று அவர்களுக்குத் தெரியும். அங்கிருக்கும் பண்ணைகள் மிகவும் பெரியவை மற்றும் பசுமையானவை.

அவர்களுக்கு முன்னும், பின்னும் மூட்டை முடிச்சுக்கள் மற்றும் குழந்தைகளுடன் மற்ற பழைய கார்கள் வந்தன. அனைவரும், எவ்விடத்தில் அவர்களுடைய வாழ்க்கை சிறப்பாக அமையும் என்று அவர்களுக்குச் சொல்லப்பட்டதோ அந்த இடத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தனர்.



***சாவெஸ்*** குடும்பம், தங்களது பண்ணையை விட்டு வந்ததில் சோகமாக இருந்தபோதும் வேறுவிதத்தில் உற்சாகமாகவும் இருந்தனர். சீசரின் பெற்றோர், அவர்களுடைய குழந்தைகள் வேலை செய்ய வேண்டிய அவசியமில்லாத அளவிற்கு போதுமான பணத்தை சம்பாதிபோம் என்று நம்பினார். அதனால், அவர்கள் பள்ளிக்குச் சென்று ஆங்கிலம் எழுதவும் படிக்கவும் கற்றுக்கொள்வார்கள் என்று நினைத்தனர்.

***சீசர்***, அந்த பழைய மோட்டார் காரில் அதிக இடம் எடுத்துக்கொள்ளவில்லை. அவர் மிகவும் சிறியவராகவும், உடல் மெலிந்தவராகவும் இருந்தார். ஆனால், அவர் தானும் வேலைக்குச் சென்று பணம் சம்பாதிக்க முடியும் என்பதில் உறுதியாக இருந்தார்.



ஒருவேளை, சில காலணிகளும், ஒரு புதிய சட்டையையும் வாங்கலாம். அவருடைய சட்டை முற்றிலும் நைந்து விட்டிருந்தது. அவரது சகோதரர் ரிச்சர்ட்டுக்கும் காலணிகள் தேவைப்பட்டன. அவர்கள் ஒன்றாகக் கூட வேலை செய்யலாம்.

இறுதியில், அந்த ஒப்பந்தக்காரர் எங்கு அவர்களுக்கு வேலை கிடைக்கும் என்று கூறினாரோ அந்தப் பெரிய பண்ணையை வந்தடைந்தனர். அவர்கள் தங்குவதற்கான இடத்தை சுற்றிலும் தேடினர். ஆனால் பழைய மற்றும் ஒரே ஒரு அறையைக் கொண்ட தகரத்தினாலான குடில்களையே பார்க்க முடிந்தது. அவை மனிதர்கள் வாழ தகுதியற்ற இடங்கள் என்றே எண்ணினர்.

பின்னர் அவர்கள் ஒரு குடிலுனுள் சென்று பார்த்தனர். அது உள்ளே ஒரு சூளையைப்போல் கொதித்தது. உள்ளே குழாய் நீரோ, குளியல் அறையோ இல்லை. ஒரே ஒரு எரிவாயு அடுப்பு மட்டும் இருந்தது.

சோர்வுற்றும், வருத்தமுற்றும் இருந்த அவர்கள் காருக்கு திரும்பி, செய்வதறியாது திகைத்து நின்றார்கள். ஆனால், மற்ற குடும்பத்தார் தங்கள் உடமைகளுடன் கொட்டகைகளுக்குச் செல்லத் தொடங்கினர்.





இறுதியாக, திரு ***சாவெஸ்***, ***ஸ் டு டி பே க் க ர்*** மேலிருந்து படுக்கை முதலியவற்றை கட்டவிழ்த்தார். ***திருமதி சாவெஸ்*** பாத்திரங்களை ஒரு அறைக்கு எடுத்துச்சென்று வைத்திருந்தார். ***சீசர்*** ஒரு வாளியை எடுத்துக் கொண்டார். பண்ணையிலிருந்த ஒரு  குழாயிலிருந்த தண்ணீரைக் கொண்டு வந்து அம்மாவிடம் கொடுத்தார் அவர் .

சூரியன் மறைந்தபோது, அவர் குடும்பம் ஆறிப்போயிருந்த இரவு உணவைச் சாப்பிட்டனர். பின்னர் அவர்கள் சூடான குடிசையின் தரையில் தங்கள் படுக்கைகளை விரித்தனர். அவர்கள் பழைய வீட்டை நினைவு கூர்ந்தபடி பயந்த நிலையில் தூங்க முயற்சித்தனர்.

அதுவே புலம்பெயர்ந்த தொழிலாளர்களுடன் சீசரின் வாழ்க்கையின் தொடக்கமாக இருந்தது. காலப்போக்கில், புலம்பெயர்ந்த தொழிலாளர்கள் அனைவரின் நிலைமை, மேம்படுவதற்கு பதிலாக மோசமாக மாறியது. பெரும்பாலான தொழிலாளர்கள் “கூனித் தொழிலாளர்கள்" என்று அழைக்கப்பட்டனர், ஏனென்றால் அவர்கள் முதுகு நாள் முழுவதும் குனிந்தே இருந்தது.



அவர்கள் முற்றிலும் சோர்வடைந்தும் முதுகு வலியோடும் இருந்தார்கள்.

காய்கறி, பழம் அல்லது பருத்தி போன்றவை பறித்து முடிக்கும் வரையிலும் பண்ணையிலேயே தங்கியிருந்தார்கள்.

இறுதியில், அவர்களது சம்பளம் பெரும்பாலும் வாக்குறுதியளித்ததற்கு குறைவாகவே இருந்தது. ஆனால் அவர்களுக்கு ஆங்கிலத்தில் பேசமுடியாததால், யாராலும் புகார் செய்ய முடியவில்லை.

அவர்கள் கொடுப்பதை வாங்கிக்கொண்டு, ஒப்பந்ததாரர்கள் சொல்லும் இடங்களுக்கு சென்றுகொண்டிருந்தனர். இப்படியாக அவ்வப்போது கிடைக்கும் அறுவடை வேலைக்காக அவர்கள் வடக்கே பயணப்பட்டு கலிபோர்னியாவின் ***சான் ஜோவாக்குவின்*** பள்ளத்தாக்கு வரை சென்றும் திரும்பியவாறும் இருந்தனர்.

சிலநேரங்களில் மகசூல் நன்றாக இருந்ததில்லை. அப்போது தொழிலாளர்கள், தங்கள் உணவிற்குக்கூட போதுமான வருமாணம் ஈட்டியதில்லை. அவர்கள் தங்கள் காருக்குத் தேவையான பெட்ரோலும் வாங்க முடியாது போனது. சில நேரங்களில் தூங்குவதற்குக்கூட எந்த குடிசையும் இல்லாது அவர்கள் தங்கள் கார்களில் அல்லது கூடாரங்களில் தூங்கினர்.

ஒரு மழை நிறைந்த குளிர்காலத்தில், ***சீசர்*** குடும்பம் ஒரு பாலத்தின் கீழ் வசித்தது. ஒரு சமயம் அறுவடைக்கு பின், அவர்கள் பெட்ரோல் கூடவாங்க முடியாமல் இருந்தனர். அவர்கள் அரிசோனாவிலிருந்த சில  உறவினர்களிடமிருந்து உதவி கேட்டு கடிதமெழுதினர். மீதமுள்ள தொழிலாளர்கள் முகாமிலிருந்து வெளியேறியபோது, பண்ணை உரிமையாளர் மின்சாரத்தையும் துண்டித்துவிட்டார். பின்னர், அந்த இருளடைந்தக் கொட்டகையில் பல நாட்களுக்குப் பசியோடும் பயந்தவாறும் காத்துக்கிடந்தனர். இறுதியில், அவர்கள் அங்கிருந்து ***லாஸ் ஏஞ்சலஸ்*** சென்று சேரப் போதுமான அளவிற்கு, அரிசோனாவிலிருந்து  உறவினர்களால் அனுப்பப்பட்ட பணம் கிடைக்கப் பெற்றனர்.



இடையே, திருமதி சாவெஸ் தனது கணவரை, காரை நிறுத்தச் சொல்லி தான் ***யுமா*** பண்ணையில் பின்னிய அழகிய பின்னலாடைகளை வெளியே எடுத்தார். பின்னர் காரிலிருந்து இறங்கி தெருநெடுகில் நடந்து அவற்றை விற்கலானார். அதில் கிடைத்த பணத்தில் சிறிது உணவையும் அடுத்த பண்ணையை சென்றடையுமளவிற்கு காருக்குத் தேவையான பெட்ரோலையும் வாங்கினர்.

குளிர்காலத்தில் வேலையாட்களுக்கு மிகக் குறைந்த வேலையேக் கிடைத்தது. அந்த மாதங்களில் குழந்தைகள் அங்கே பள்ளிக்கு செல்லும் பொருட்டு திருவாளர் மற்றும் திருமதி ***சாவெஸ்*** ஒரே இடத்தில் தங்க முயன்றார். அவர்கள் உணவிற்காக எல்லாவிதமான வேலையையும் செய்து வந்தனர். இருப்பினும், வேலை முடிவடைந்த காரணத்தினால் சில நாட்கள் அல்லது சில வாரங்களுக்குத்தான் ஒரு இடத்தில் தங்கியிருக்க முடிந்தது. பின்னர், அவர்கள் வேலை தேடி எங்காவது செல்ல வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

எட்டாவது வகுப்பு முடிக்கும் முன், ***சீசர்***, சுமார் மூன்று **டசன்** பள்ளிகளில் படிக்க நேர்ந்தது. அவர் தனது இருக்கையில் இருந்தபடி, சிறிது ஆங்கிலத்தைப் பேசுவதைக் கேட்டும் கற்றும் வந்தார். தங்கள் சமூகத்தின் மத்தியில் ***ஸ்பானிஷ்*** மொழி பேசும் புலம்பெயர்ந்த தொழிலாளர்களின் குழந்தைகளின் மீது பள்ளி ஆசிரியர்கள் போதிய அக்கறைக்காட்டவில்லை.



கந்தல் துணிகளை அணியும் குழந்தைகள் விரைவில் அங்கிருந்து கிளம்பிவிடுவார்கள் எனவும், அந்த இடத்தை மற்ற குழந்தைகள் நிறப்புவார்கள் என்றும் அவர்கள் அறிந்திருந்தனர்.

***சீசர்***, எந்த கேள்விக்கும் பதில் தெரிந்தவுடன், தனது கையை உயர்த்தி, அதற்கு பதிலளிக்க விரும்பினார். ஆனால் அவர் மிகவும் கூச்ச சுபாவமுடையவராக இருந்தார். மற்றவர்கள் அவரைப் பார்த்து ஏளனம் செய்வார்கள் என்று அச்சம் கொண்டார்.

பள்ளி முடிந்த பிறகு, ***சீசரும் ரிச்சர்டும்*** ஆற்றிலிருந்து வயல்களுக்குத் தண்ணீர் கொண்டு வரும் கால்வாயில் மீன் பிடிப்பார்கள். இரவு உணவை சமைக்க, அவர்கள் பச்சைக் கடுகு கீரைகளைக் கொண்டு வந்து தாயாரிடம் கொடுப்பார்கள்.. அவர்கள் எப்போதும் பசியுடனே இருந்தார்கள்.





அவர்கள், சாலையோரங்களில் கிடக்கும், உள்புறம் மெல்லிய தகரத் தகடுகள் ஒட்டப்பட்ட பழைய சிகரெட் பாக்கெட்டுகளையும், மெல்லும் சவ்வுமிட்டைகளைச் சுற்றி இருக்கும் உறைத் தாள்களையும் சேகரித்து, உருட்டி பந்துகள் செய்தனர். பந்து பதினெட்டு பவுண்ட் எடையை எட்டும்போது, அவர்கள் அதை ஒரு சில டாலர்களுக்கு விற்று, தங்களுக்கு டென்னிஸ் ஷூக்கள் மற்றும் இரண்டு சட்டைகளை வாங்கிகொண்டனர். அன்று, அது அவர்களுக்கு ஒரு உற்சாகமான நாள். வார இறுதி மற்றும் விடுமுறை நாட்களில், அவர்கள் தங்களது பெற்றோருடன் வயல்களில் வேலை செய்தனர்.

கலிஃபோர்னியா பள்ளத்தாக்குகளில், வெளுத்தத்தோல் உடைய **மெக்ஸிகன்** அல்லாத மக்கள் "**ஆங்கிலோஸ்**" என்று அழைக்கப்பட்டனர். ***சீசர்* ஆங்கிலோஸ்** தொழிலாளர்களுடன் ஆங்கிலத்தில் பேசினார். அவர்களிடமிருந்து அவர், பல்வேறு பண்ணைகள் மற்றும் அவற்றின் முதலாளிகள் பற்றி பல புதிய விஷயங்களைத் தெரிந்துகொண்டார். எந்த பண்ணையில் வேலைக்குச் சென்றால் அவரால் அதிக பணமீட்ட முடியும், எங்கு அவர் ஏமாற்றப்படமாட்டார் என்பதையெல்லாம் கண்டுகொண்டார். தொழிலாளர்கள் வாழ்வதற்கான வீட்டுவசதி எங்கு மோசமானது என்பதுப் பற்றியும் அவர் அறிந்து கொண்டார்.

***சீசர்*** இந்த எல்லாவற்றையும் தன் பெற்றோர்களுக்கு விளக்கினார். மெக்ஸிகோவிலிருந்து வந்த மற்ற மெக்சிகன்-அமெரிக்க தொழிலாளர்கள் குடும்பங்களுக்கும், புதிய குடும்பங்களுக்கும் கூட அவர் தெரிவித்தார். மற்றவர்களும், அவரையும் அவரது குடும்பத்தினரையும் போல துன்பப்படுவதை அவர் விரும்பவில்லை.

இறுதியில், சாவெஸ் குடும்பம் சுற்றி அலைந்து திரிவதில் விரக்தியடைந்தனர். அவர்கள், பெரிய பண்ணைகளுக்கு அருகிலேயே அமைந்த கலிபோர்னியாவின் ***சான் ஜோஸ்***ஸில், ஒரு சிதிலமடைந்த குடிசையில் நிரந்தரமாக குடியேறினார். அங்கு அவர்களுக்கு வழக்கமாக வேலை கிடைத்தது. ***சீசர்*** வளர்ந்தபோது, தன் குடும்பத்தை விட்டு வெளியேறி, ஒரு பண்ணையில் வேலை செய்யத் தொடங்கினார்.

*சீசர்* திராட்சைத் தோட்டங்களில் வேலை செய்வதை விரும்பினார். வசந்த காலத்தில் அவர் திராட்சைத் தோட்டங்களின் நீண்ட வரிசைகளுக்கு நடுவே நடந்து புதிய இலைகள் துளிர்வதைப் பார்க்க விரும்பினார். அவர் கோடைக்காலங்களில் சூரிய ஒளியில் திராட்சைக் கொத்துக்கள் வளர்ந்து பழுப்பதையும் கண்டார்.

சில வழிகளில், அது கடினமான பணியாக இருந்தது. பெரும் திராட்சை கொத்துக்கள் தொங்கும் பந்தலின் கீழ், ஒரு வகை ஈக்கள் அவருடைய கைகளிலும் முகத்திலும் கூட்டமாக மொய்த்தன. சூழ்ந்திருந்த காற்று மூச்சுத்திணறலை உண்டாக்கியது. நீண்ட நேரம் குனிந்தே வேலை செய்யவேண்டியிருந்ததால் அவருக்கு முதுகு வலியெடுத்தது.

ஆனால் திராட்சைத் தோட்டத்தில், சில வேலைகள் வருடம் முழுவதும் நடந்துகொண்டிருக்கிறது. அதனால் அவர்கள் ஒரு வேலையிலிருந்து இன்னொன்றுக்கு செல்ல வேண்டிய அவசியம் இல்லை. *சீசர்* மற்ற வேலையாட்களுடன் ஒரு முகாமில் தங்கி வேளாவேளைக்கு உணவு அருந்தி வந்தார். படிப்படியாக, அவர் திராட்சைகளைக் கையாள்வதிலும், திராட்சைகளைக் கத்தரிப்பதிலும், திராட்சைத்தோட்டத்தில் பந்தலிடுவதிலும் மிகவும் திறமையானவராக ஆனார். புதியவர்கள் செய்ய முடியாத வேலைகளைத் தான் செய்வதில் பெருமை கொண்டார்.

ஆனால் *சீசர்* தனது குழந்தை பருவ வறுமையை மறக்கவில்லை. பல குழந்தைகளைக்கொண்ட பெரிய குடும்பங்கள் இன்னமும் கூட நெரிசலான அழுக்கடைந்த குடிசைகளில் வாழ்ந்து வந்தனர்.

தங்குவதற்கு தற்போது இருப்பதை விட மேலான வீடுகளையும், சம்பள உயர்வையும் உரிமையாளர்களிடத்தில் கேட்கச் செல்வதைப் பற்றி மற்ற தொளிலார்களிடத்தில் பேசலானார். ஆனால், பெரும்பாலான தொழிலாளர்கள் வேலை பறிபோகிவிடும் என்று பயந்தனர். அவர்களை நம்பி குடும்பங்களிருந்தன.

அதே சமயத்தில், சீசர் கலிபோர்னியாவின் **டெலானோ**வில் ***ஹெலன் ஃபேபெல்லா*** என்ற பெண்ணைச் சந்தித்தார். ***சீசர்***, தொழிலாளர்களின்  நலனுக்காக என்ன செய்ய முயன்று கொண்டிருக்கிறாரோ அதில் ***ஹெலன்*** நம்பிகை கொண்டிருந்தார். ***சீசர்*** அவரோடு காதல் வயப்பட்டு அவரைத் திருமணம் செய்யதுகொள்ள விரும்பினார்.

ஆனால் இரண்டாம் உலகப் போர் துவங்கியது, அதனால் ***சீசர்*** கடற்படையில் சேர்ந்தார். அவர் தனது நாட்டிற்காக உழைப்பதில் பெருமைக் கொண்டார்.

விடுப்பில் இருக்கையில், ஒரு நாள் அவர் ***ஹெலனை*** சந்திக்க ***டெலனோ***விற்கு வந்தார். ***ஹெலனை*** திரைப்படத்திற்கு அழைத்துச் சென்றார். அரங்கில் அவர்கள் உட்கார்ந்த பிறகு, இருக்கைகளை காண்பிக்கும் ஒருவர் வந்து, அவர்கள் உட்கார்ந்திருந்த இடங்கள் "***ஆங்கிலோ***" மக்களுக்காக ஒதுக்கப்பட்டவை என்றார். மேலும் அவர், அவகளிருவரையும், அரங்கின் மறுபக்கம்  ***மெக்ஸிகன்-அமெரிக்கர்கள்*** உட்காரும் இடத்திற்கு செல்லும்படி வற்புறுத்தினார்.

சீசர் ஒரு வன்முறையாளர் அல்ல. பொதுவாக, அவர் கனிவுடனும், மென்மையாகவும் பேசக்கூடியவர். ஆனால், அவர் கோபமடைந்திருந்தார்.

***சீசர்*** அதை எதிர்த்தார். அவர் இருக்கை மாற மறுத்துவிட்டார். அவர் ஒரு கடற்படையைச் சேர்ந்தவர். அவர் ஓர் அமெரிக்கர். இறுதியாக அவரும் ***ஹெலனும்*** வெளியேற வேண்டியதாயிற்று.

அவர் ***ஹெலனோடு*** சேர்ந்து வெளியேறினார். அதே நேரத்தில், போர் முடிந்ததும், அவருடைய மக்களுக்கு மரியாதையும், நீதியும் கிடைக்க இராப்பகலாக உழைக்க முடிவெடுத்தார்.

போர் முடிந்த பின்னர், ***சீசர் ஹெலனை*** மணந்தார். பின்னர், சிறிது காலம், ஒரு மணி நேரத்திற்கு வெறும் அறுபத்தைந்து **சென்ட்**க்கு, ***சான் ஜோஸ்*** அருகில் **ஆப்ரிகாட்** பழங்கள் பறிக்கும் வேலையிலிருந்தார்.



***சீசர்*** ஊதிய உயர்வுக் கோரிக்கைக்காக சக ஊழியர்களையும் தன்னோடு சேர்த்துக்கொள்ள முயன்றார். ஆனால் பெரும்பாலானோர் தங்கள் உரிமையாளர்களுக்கு இன்னமும் பயந்தனார். இன்னும் அமெரிக்க குடிமக்களல்லாத ***மெக்ஸிகர்கள்***, குறை தெரிவித்தால், ***மெக்ஸிகோ***விற்குத் திரும்ப அனுப்பப்பட்டுவிடுவோம் என்பதை உறுதியாக நம்பினர். ஆனால், ***மெக்சிகோ***வில் வாழ்க்கை ***கலிபோர்னியா***வில் இருப்பதைக் காட்டிலும் மிக மோசமாக இருந்தது.

எனவே, சீசர் மெக்சிக வேலையாட்கள் ஆங்கிலம் எழுத படிக்கக் கற்றுக் கொள்ள எதுவாக வகுப்புகள் ஏற்பாடு செய்தார். அமெரிக்க குடிமக்களாவதற்கான தேர்வில் அவர்கள் தேர்ச்சி பெறவேண்டும் என்று விரும்பினார். பின்னர் அவர்கள் இவ்வளவு பயங்கொள்ள மாட்டார்கள்.

ஒரு நாள் ஒரு **ஆங்கிலோ**, ***ஃப்ரெட் ரோஸ்***, **சான் ஜோசு**க்கு வந்தார். அவர் சீசருடைய வேலையைப் பற்றி கேள்விப்பட்டு, சீசரை சந்திக்க விரும்பினார். ஆனால் ***சீசர்***, ஆங்கிலோகர்களால் ஏமாற்றவும், கொடுமைக்குமுள்ளானார். எனவே அவர் அவர்களை நம்புவதில்லை. நீண்ட காலம் ***சீசர்***, ***ஃபிரெட் ரோஸைச்*** சந்திக்க மறுத்துவிட்டார்.

ஆனால் இறுதியில், ***சீசர், ஃப்ரெட் ரோஸைக்*** சந்தித்தபோது, ***ஃப்ரெட்*** தொழிலாளர்களுக்கு உதவ விரும்பினார் என்பதில் ஆச்சரியமடைந்தார். ***சீசர்*** நம்பிகையாயிருந்த விஷயங்களை ***ஃப்ரெட்*** விவாதித்தார். சமூக சேவை அமைப்பில் அவர் ஒரு அமைப்பாளராக இருந்தார் என்பதை சீசருக்கு விளக்கினார்.

***சீசர்*** உற்சாகமடைந்தார். ***ஃப்ரெட் ரோஸ்*** சமூக சேவை அமைப்பிற்காக வேலை செய்ய சீசரைக் கேட்டபோது, ***சீசர்*** உடனடியாக ஒப்புக்கொண்டார்.

***சீசர்***, பகல் நேரங்களில் **ஆப்ரிகாட்** பழங்களைப் பறிக்கும் வேலைக்கு சென்றார். மாலையில், அமெரிக்க குடிமக்களாக மாறிய ***மெக்சிக-அமெரிக்கர்***களை அவர் சந்தித்தார். அவர்கள் மற்ற அமெரிக்க குடிமக்கள் போன்று வாக்களிக்க பதிவு செய்யும்படித் தொடர்ந்து அவர்களுக்கு அறிவுறுத்தினார். இந்த வழியில் ***சீசர்*** இரண்டு மாதங்களில் நான்கு ஆயிரத்திற்கும் மேற்பட்ட தொழிலாளர்களை பதிவு செய்தார்.



வேளாண் தொழிலாளர்கள் ***சீசர்*** என்ன செய்துக் கொண்டிருக்கிறார் என்பதை விரைவில் புரிந்து கொண்டனர். அவரது செயல்கள் தொழிலாளர்கள் மத்தியில் பிரச்சினையை உண்டாக்கும் என்று அஞ்சிய உரிமையாளர் சீசரை வேலையிலிருந்து அனுப்பிவிட்டார்.

பிறகு ***சீசர்*** முழு நேர சமூக சேவை அமைப்பில் பணிபுரிந்தார். இப்போது அவர் மாதந்தோறும் 325 டாலர் சம்பாதித்தார். அது, அவர் தனது வாழ்க்கையில் இதுவரை சம்பாதித்ததிலேயே அதிகம். அவர் பணத்திற்கு முக்கியத்துவம் அளிக்கவில்லை. அவருடைய பணியிலேயே அவர் மிகவும் ஆர்வம் கொண்டிருந்தார்.

***சீசரி***ன் வேலைகளில் ஒன்று கூட்டங்களை ஏற்பாடு செய்வதாகும். கூட்டத்தை வழிநடத்துவது எப்படி என்பது அவருக்குத் தெரியாததால், அவர் எப்போதும் கவலையுடனிருந்தார்.

அவர் இதுவரை தனது கருத்துக்களை சிறப்பாக வெளிப்படுத்தக் கற்றுக்கொள்ளவில்லை. எனவே அவர் ஒவ்வொரு நிமிடமும் வாசித்தார். மற்ற பேச்சாளர்களின் பேச்சுகளை மிகுந்த கவனத்துடன் கேட்டார்.

படிப்படியாக தொழிலாளர்கள் அவரது பேச்சை கவனிக்கத் தொங்கியதையும், அவரது கருத்துக்களை ஏற்றுக்கொள்வதையும் கண்டார். அவர்கள் அவரை விரும்பினார்கள், ஏனெனில் சீசர் அவர்களின் பிரச்சினைகளுக்கு செவிமடுத்து புரிந்துகொண்டார்.

சீசர், அந்த நிறுவனத்தில் சேர மக்களை ஒவ்வொரையும் ஊக்குவித்தார். இது மிகவும் கடினமான காரியமாக இருந்தது.

தொழிலாளர்கள் தங்கள் வேலைகளை இழக்க நேரிடும் என்று எப்போதும் பயந்தனர். மெக்சிகன் தொழிலாளர்களை குடியுரிமை பெறுவதற்கான வகுப்புகளுக்கு செல்லவைப்பது மிகவும் கடினமான காரியமாக இருந்தது. தொழிலாளர்கள் வகுப்புக்குச் செல்வதாக உறுதியளிபார்கள், ஆனால் பின்னர் வீட்டிலேயே தங்கிவிடுவார்கள். சிலநேரங்களில், சீசர் அவர்களிடம் கடுமையாக நடந்துகொள்ளவும் மேலும் அவர் அவர்களை "**<u>கோழைகள்</u>**" என்று திட்டவும் வேண்டியிருந்தது.

***சீசர்*** மிகவும் பொறுமையிழந்தார். அவருக்கு முப்பத்தி ஐந்து வயதிருக்கும்போது மார்ச் 1962 ல், அவர் சமூக சேவை அமைப்பிலிருந்து விலக முடிவெடுத்தார். இப்போது சீசருக்கும் ஹெலனுக்கும் குழந்தைகளிருந்தனர். பின்னர் அவர்கள் புழுதி மண்டும் சமவெளியான **டெலோனோ**வுக்குத் திரும்பி அங்கு ஒரு பழைய, சிறிய வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டார்கள். அந்த வீடு மற்ற ***மெக்சிகன்-அமெரிக்கர்***கள் வாழ்ந்த நகரத்தின் மேற்கில் இருந்தது. ***ஆங்கிலோ***க்கள் நகரத்தின் கிழக்குப் பகுதியில் வாழ்ந்தனர்.



***சீசர்*** மற்றும் ஹெலன் 1200 டாலர் சேமித்திருந்தனர். அதைவைத்துக்கொண்டு, ***டிலானோ***விற்கு அருகிலுள்ள **சான் ஜோக்கின்** பள்ளத்தாக்கின் பண்ணை தொழிலாளர்களை ஒன்றுபடுத்தவும் உதவவும் நினைத்தனர். ***ஹெலன்*** தங்களது குடும்பத்தை நடத்துவதற்காக வயல்களில் வேலைக்குச் சென்றார். அவ்வப்போது, ***சீசர்*** கூட குழிதோண்டும் மண்வேலையைச் செய்தார்.

அவர் தனது புதிய அமைப்பிற்கு **தேசிய பண்ணை தொழிலாளர்கள் சங்கம்** (NFWA) என்று பெயரிட்டார்.



ஆறு மாதங்களுக்கு சீசர் வெவ்வேறு புலம்பெயர்ந்த தொழிலாளர்களின் முகாமிற்குப் பயணித்தார். ஒவ்வொரு முகாமிலும் NFWA ல் மற்றவர்களையும் இணைக்குமளவிற்கு உற்சாகமான தொழிலாளர்களைக் கண்டார்.

முந்நூறு உறுப்பினர்களைச் சேர்த்தப்பின்னர், அவர்களோடு ஒரு கூட்டம் நடத்தவேண்டும் என்று முடிவெடுத்தார். அவரும் அவரது மைத்துனர் ***மானுவலு***ம் சேர்ந்து ஒரு கொடியை வடிவமைத்தனர். அது சிவப்பு நிறத்தின் நடுவில் வெள்ளை நிற வட்டத்திதிற்குள் கருப்பு நிற கழுகைக் கொண்டக் கொடியாகும். முதல் கூட்டத்தில், சீசர் அனைத்து உறுப்பிளர்களுக்கும் அந்த கொடியைக் காண்பித்தார். அவர்களுக்கு அது மிகவும் பிடித்திருந்தது.

ஒவ்வொரு குடும்பமும் ஒரு சிறு தொகையை அளித்தால், அவர்களுக்கு NFWA உதவ முடியும். பின்னர் NFWA மளிகை கடைகள் மருந்து கடைகள், மற்றும் பெட்ரோல் நிலையங்களைத் தொடங்கும், இதன் மூலம் மக்கள் மலிவான பொருட்களை வாங்க முடியும். ஆங்கிலம் படிக்க அறிந்திருக்கவில்லை என்ற காரணத்தால் அவர்கள் ஏமாற்றப்பட்டதால் அவர்களுக்கு உதவிட வழக்கறிஞர்களை அமர்த்த முடியும். இந்த அமைப்பு உறுப்பினர்களுக்கு கடனும் கொடுக்கும்.

முந்நூறு உறுப்பினர்கள் சீசரின் திட்டத்தைக் கேட்டபோது, அவர்கள் மகிழ்ச்சியுடன் கைகொட்டிப் பாராட்டினார்கள். அந்த கூட்டத்திற்குப் பிறகு மேலும் பலர் NFWA இன் உறுப்பினர்களாக சேர்ந்தார்கள்.

அடுத்த மூன்று ஆண்டுகளில், தான் என்ன செய்வேன் என்று உறுதியளித்தாரோ அனைத்தையும் சீசர் நிறைவேற்றினார். அதே நேரத்தில், மேலும் முக்கியமான திட்டங்களையும் அவர் வடிவமைத்தார்.

கடைகளிலும் தொழிற்சாலைகளிலும் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கான பாதுகாப்புச் சட்டங்கள் இருப்பதை அவர் அறிந்திருந்தார். அவர்களுக்கு நியாயமான ஊதியம் தரப்படவேண்டும், மேலும் தரமானப் பணிச்சூழலும் இருக்க வேண்டும்..

ஆனால் பண்ணையில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு அத்தகைய சட்டங்கள் இல்லை. அங்கு பண்ணையார்கள் தான்தோன்றித்தனமாக குறைந்தபட்ச ஊதியத்தை வழங்கினார்கள். அவர்களை தினந்தோறும் நீண்ட நேரம் ஓய்வெடுக்க விடாமல் வேலைவாங்கினர். பண்ணை உரிமையாளர்கள் தங்கள் பணியாளர்களுக்கு சுத்தமானதொரு, வசிக்குமிடத்தைக்கூட கொடுக்க வெண்டியதில்லை.

சீசர் இவையனைத்தையும் மாற்ற முடிவு செய்தார். சங்கம் (NFWA) போதிய வளர்ச்சியடைந்ததும், மற்ற தொழிலாளர்களுக்கு கிடைக்கக்கூடிய உரிமைகளை விவசாயத் தொழிலாளர்களும் கோரிக்கையிட வேண்டும் என்று விரும்பினார்.

ஆனால், 1965 ஆம் ஆண்டில், NFWA இன் உறுப்பினர்கள் அல்லாத சில திராட்சை அறுவடை தொழிலாளர்கள் பொறுமையிழந்தனர். அவர்கள் அந்த அறுவடைப் பருவத்தில் கூடுதல் வருவாய் ஈட்ட வேண்டும். ஏனென்றால் குளிர்காலத்தில் அவர்களுக்கு எந்த வேலையும் கிடைக்காது என்பது அவர்களுக்குத் தெரியும்.

பல திராட்சை தோட்டங்களில், ஒரு மணி நேரத்திற்கு 1.4 டாலர் சம்பளத்தையும், அறுவடை செய்யப்பட்ட திராட்சை பெட்டி ஒவ்வொன்றுக்கும் 25 சென்ட்டுகளையும் கோரினர்.

தொழிலாளர்கள் அச்சுறுத்தினர்: "நாங்கள் வேலைநிறுத்தம் செய்வோம்! நாங்கள் போராட்டம் செய்வோம்! உன் திராட்சை, தோட்டத்திலேயே அழுகிப்போகும்."



ஆனால், தோட்டங்களின் உரிமையாளர்கள் அவர்களின் ஊதியங்களை உயர்த்த மறுத்துவிட்டனர். அதனால் தொழிலாளர்கள் திராட்சைத் தோட்டங்களின் விளிம்பில் வரிசையாக நின்றனர். அவர்கள் "ஸ்ட்ரைக்!" என்று கூச்சலிட்டனர். அவர்கள் ஸ்பானிய மொழியில் ஸ்ட்ரைக்கை "ஹெல்கா" என்று கூச்சலிட்டனர், அவர்கள், மற்ற தொழிலாளர்களும் பண்ணையிலிருந்து வெளியேறி தங்களுடன் இணைய வேண்டும் என்று விரும்பினர்.




***சீசர்*** ஒரு பெரும் வேலைநிறுத்தத்திற்கு தயாராகவில்லை. அந்த நேரத்தில் சீசர் 87 டாலர்கள் மட்டுமே வைத்திருந்தார். பல தொழிலாளர்களுக்கு வேலைநிறுத்தத்தின்போது சாப்பாட்டிற்கு பணம் தேவைப்படும் என்று அவர் கவலையுற்றார். ஆனால், அவரைப் பின்பற்றுபவர்கள் வேலைநிறுத்தத்தில் இணையுமாறு அவரை நிர்பந்தித்தனர். இறுதியாக, சீசர் ஒப்புக்கொண்டார். அதன் பிறகு NFWA உறுப்பினர்கள் தோட்டங்களின் அருகில் நின்று "ஹெல்க! ஹெல்க! ஸ்டிரைக்!" என்று கோஷமிட்டனர்.

பல வாரங்களாக உரிமையாளர்களும் தொழிலாளர்களும் மோதல்களிலும், விவாதங்களிலும் ஈடுபட்டனர். இறுதியாக, இரண்டு தோட்டங்களின் உரிமையாளர்கள் ஊதிய உயர்விற்கு ஒப்புக்கொண்டார்கள். அந்தத் தோட்டத் தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பினர். அதற்குப் பிறகு, ஒரு பெரிய திராட்சைத் தோட்டத்தில் மற்றுமொரு வேலை நிறுத்தம் துவங்கியது.

இம்முறை, ***சீசர் சாவெஸே*** தொழிலாளர்கள் அனைவருக்குமான பிரதிநிதியாக பேச அனுமதிக்க வேண்டுமென்று கோரிக்கை வைத்தனர். உரிமையாளர் அதை ஏற்கவில்லை. அதற்கு பதிலாக, அவர் டிரக்குகளில் புதிய தொழிலாளர்களை மெக்ஸிக்கோவிலிருந்து அழைத்து வந்தார்.

இந்த ***மெக்சிகர்***கள் பிரச்சினையைப் பற்றி அறிந்திருக்கவில்லை. அவர்களுக்கு ஆங்கிலம் புரியவில்லை. "ஹெல்கா" என்ற வார்த்தையை அவர்கள் கேட்டபோது, அந்த சூழ்நிலையை புரிந்து கொண்டார், அதன் பின்னர் வேலைநிறுத்தம் தொடர்ந்தவாறிருந்தது.

அதே நேரத்தில் ***சீசர்*** புகழடைந்தார். அவரைப்பற்றியும் வேலைநிறுத்தத்தைப் பற்றியும் செய்திகள் நாடெங்கிலும் செய்தித்தாள்களிலும் பத்திரிக்கைகளிலும் வெளியானது.

செய்திகளைப் படித்த பலரும் சீசரின் செயலில் நம்பிக்கைக்கொண்டனர். ஆயர்கள், மந்திரிகள், மதக்குருக்கள், கன்னியாஸ்திரிகள், மாணவர்கள் மற்றும் பலர் சீசருக்கு உதவ **டெலனோ**வை அடைந்தார்கள். கடிதங்களுக்கு அவர்கள் பதிலளித்தனர், கடைகளை கவனித்துக்கொண்டனர். வேலைநிறுத்தம் செய்த தொழிலாளர்களுக்கு அவர்கள் உணவும், குளிர் பானங்களும் கொண்டு சென்றனர். பலர் உணவு, உடை மற்றும் பணத்தை அனுப்பி வைத்தனர்.

***சீசர்*** அவர்கள் அனைவருக்கும் நன்றி தெரிவித்தார். ஆனால் இன்னும் வேலைநிறுத்தம் தொடர்ந்தது. ஒவ்வொரு நாளும் **டெலனோ** பிளவுபட்டு நிலைமை மோசமடைந்தது. வேலைநிறுதத்தை முடிக்க எந்த ஒரு வழியும் சீசருக்குப் புலப்படவில்லை.

ஒரு நாள் சீசருக்கு புதிய யோசனை ஒன்று மனதில் உதித்தது. நாடு முழுவதும் பலர் பண்ணைத் தொழிலாளர்களின் மீது அனுதாபம் கொண்டிருக்கிறார்கள் என்றால், ஒருவேளை அவர்கள் வேறு வழிகளில் உதவலாம். அதாவது, பண்ணை உரிமையாளர்கள் தொழிலாளர்களுடன் சமரசம் எட்டும் வரையில் அவர்கள் திராட்சையை வாங்காமல் இருக்கவும் – அவற்றைப் புறக்கணிக்கவும் – ஒருகால் ஒப்புக்கொள்ளலாம். சீசர் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளவர்களின் ஒரு கூட்டத்தை கூட்டினார். அதில் அவர் தனது புதிய யோசனையை அவர்களிடம் தெரிவித்தார். தொழிலாளர்கள் மிகுந்த உற்சாகமடைந்தனர்.

1968 ஜனவரியில், ஐம்பது தொழிலாளர்கள், வெப்பமூட்டப்படாத ஒரு பழைய பள்ளி வாகனத்தில் நியூ யார்க்கிற்கு சென்றனர். மற்ற தொழிலாளர்கள் இதைப் போன்று மற்ற நகரங்களுக்குச் சென்றனர். கடைக்காரர்களிடம் திராட்சையை விற்க வேண்டாமென்று கேட்டுக்கொண்டனர். அதேபோல், அவர்கள் நுகர்வோர்களிடம் திராட்சையை வாங்க வேண்டாமென்று கேட்டுக்கொண்டனர்.

தொழிலாளர்கள் சென்ற இடங்களிலெல்லாம், மக்கள் தாமாக முன்வந்து கடைகளின் முன் "திராட்சை வாங்காதீர்கள்“ என்ற பதாகைகளை ஏந்தி சென்றார். டிரக் டிரைவர்களும் கூட உதவ முன்வந்தனர். தோட்டங்களில் இருந்து திராட்சைகளை நகருக்கு கொண்டுசெல்வதற்கு பலர் மறுத்துவிட்டனர். துறைமுகத் தொழிலாளர்கள், கடல்கடந்து மற்ற நாடுகளுக்கு அனுப்பவிருந்த திராட்சையை கப்பல்களில் ஏற்ற மறுத்துவிட்டனர்.




அடுத்த வருடம், புறக்கணிப்பு நாட்டின் மற்ற பகுதிகளுக்கும் பரவியது. சீசர் மிகமிக மகிழ்ச்சியடைந்தார். இறுதியாக, விவசாயத் தொழிலாளர்களின் பிரச்சினையை அமெரிக்க நாடு முழுவதிற்கும் கொண்டு செல்ல ஒரு புதிய வழியைக் கண்டுபிடித்ததாக அவர் நம்பினார்.

***சீசர்*** இப்போது நடுத்தர வயதிலிருந்தார். அவரது கருப்பு தோல் இன்னும் சுருங்கவில்லை மற்றும் அவரது முடி இன்னும் கருப்பாகவும் அடர்த்தியாகவும், இருந்தது. ஆனால் இப்போது அவர் சோர்வுற்றும், மெலிந்தும் இருந்தார். பல ஆண்டுகளாக குனிந்திருந்தவாறு வேலை செய்தது அவரின் முதுகை காயப்படுத்தியிருந்தது. காயம் வலி மிக்கதாக இருந்தது.

ஒரு குழுவாக நண்பர்கள் சுழற்சி முறையில் அவரை இப்போது கவனித்துக்கொண்டனர். கூட்டங்களுக்கு அவர் செல்லும்போது, அவருடைய  நண்பர்கள், அவர் படிகளில் ஏறவும் இறங்கவும் உதவிசெய்தனர். அவர், அவர்களுக்கு மிகவும் முக்கியமானவர் என்பதால், எல்லோரும் அவரை பாதுகாக்கவும் தங்களால் இயன்ற வகையில் அவருக்கு உதவிடவும் விரும்பினர்.

போராட்டம், துன்பம் மற்றும் வலி ஆகியவற்றின் காரணமாக, ***சீசர்*** மிகவும் மாறிவிடவில்லை. அவர் இன்னமும் மென்மையான குரலுடைய, பொறுமையான தலைவர். ஒரு புறக்கணிப்பு பற்றி ஒரு செய்தித்தாள் நிருபரிடத்தில் பேசுவதற்கு எவ்வளவு நேரம் எடுத்துக்கொள்வாரோ அதுபோன்று ஒரு தொழிலாளியிடம் பேசுவதற்கும், அவரது சொந்தப் பிரச்சினைகள் பற்றி அவர் தெரிந்துகொள்வதற்கும் எடுத்துக் கொள்வார். அவரும் அவரது குடும்பமும் மற்ற தொழிலாளர்களை விட சிறப்பாக வாழ்ந்துவிடவில்லை.

தான் சிறுவனாக இருந்த போது இருந்த நிலைமையைவிட விவசாய தொழிலாளர்களின் வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள மாற்றங்களைக் கண்டு ***சீசர்*** மகிழ்ந்தார். இப்போது தொழிலாளர்களுக்கு நல்ல ஊதியம் கிடைகிறது, நல்ல வீடுகள் கிடைக்க பெறுகிறார்கள். மதியம், தொழிலாளர்களுக்கு ஓய்வு நேரம் உண்டு. சிலர் வேலைக்கு வர இயலாமல் நோய்வாய்ப்பட்டிருந்தாலும், முழு ஊதியம் பெறுகின்றனர். அவர்களுடைய பிள்ளைகள் பள்ளிக்குச் செல்கின்றனர்.

ஆனால் இப்போது சீசர் எதிர்காலத்திற்காக வாழ்கிறார். ஒரு நாள், அமெரிக்க நாடாளுமன்றம் பண்ணைத் தொழிலாளர்களையும் நாட்டிலுள்ள மற்ற அனைத்து தொழிலாளர்களைப்போல் நடத்துமென்று அவர் உறுதியாக நம்புகிறார். அது, பண்ணைத் தொழிலாளர்களின் தொழிற்சங்கங்களுடையத் தலைவர்கள் பண்ணை உரிமையாளர்களுடன் பிரச்சினைகளைத் தீர்த்துகொள்வதற்கான உரிமையைக் கொடுக்கும் என்று அவர் நம்புகிறார். இந்த உரிமை இப்போது அவர்களுக்கு இல்லை.

அந்த நாள் வரும் போது, பண்ணைத் தொழிலாளர்கள் இனி மறக்கப்பட்ட அமெரிக்கர்களாக இருக்க மாட்டார்கள் என்று சீசர் சாவெஸ் நம்போகிறார்.

**சீசர் சாவெஸ் 1993 ல் தனது 66வது வயதில் உயிரிழந்தார்.**



